Regd. No. M. 1979






# அருணோதயம்

தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் பத்திரிகை

The Tamil Evangelical Lutheran Journal

Vol. 89. No. 8. ஆகஸ்ட் 1952



Published by: The Tranquebar Printing & Publishing House
Vepery, Madras.

Edited by: Rev. S. Gnanamanickam, Nagapattinam.

# விளம்பரம்

## 1. Explanation of Luther's Small Catechism
## or
## Schwartz Catechism

இப்புத்தகம் நமது பிரசுரசாலையில் கடந்த சில வருஷங்களாய் இல்லாமையினாலும், அநேகர் இச்சிறு புத்தகம் வேண்டுமென்றதின் பேரிலும் மறுபடியும் 14-ம் பதிப்பொன்றைப் பிரசுரித்துள்ளோம். 104 பக்கங்களடங்கிய இந்நூல் விலை அணா 8.

THE TRANQUEBAR PRINTING & PUBLISHING HOUSE.

---

# மரண அறிக்கை

எங்களருமைத் தகப்பனார் D. அருமைநாயகம் உபா./உபதேசியார், சில நாட்களாய் நோய்வாய்ப்பட்டு, புறையார்—கடுதாசிப் பட்டறையில், கடந்த ஜூலை மீ 9 உ மாலை 8-45 மணிக்குக் கர்த்தருக்குள் அமைதலாய் நித்திரை யடைந்தார். அவரது சடலம் 11—7—52-ல் குருமார், ஊழியர், பந்துமித்திரர் புடைசூழ, புறையார் பெத்லேகேம் ஆலயத்திற்குக் கொண்டுவரப்பட்டு மறைத்திரு. கார்ல் சாமுவேல் அவர்களால் உயிர்த்தெழுதலின் நம்பிக்கையுடன் நல்லடக்கஞ் செய்யப்பட்டது. தாழ்மை, கபடின்மை, ஜெபவாஞ்சை, ஊழியத்தில் ஊக்கம், உண்மை முதலிய சுகுணங்கள் அவர் ஜீவியத்தில் விளங்கின. அன்னவர் சிதம்பரம், பல்லடம், பென்ஷனுக்குப் பிறகு புறையார் முதலிய வட்டங்களில் பயனுற உழைத்தார். வயது 70.

'நீதிமான் தீங்கு வருமுன் எடுத்துக் கொள்ளப்பட்டு, சமாதானத்துக்குள் பிரவேசித்து, தன் படுக்கையில் இளைப்பாறுகிறான்.' எசாயா. 57-1-2.

தந்தி, கடிதங்கள் மூலமாயும் ஆறுதல் சொன்ன சகலருக்கும் எங்கள் நன்றி கூறுகிறோம்.

தேவானுக்கிரகம், சூப்பர்வைசர், சென்னை.<br>
தேவாசீர்வாதம், குருக்குழு பிரசங்கியார்,<br>
N.C.O., I.A.F., பெங்களூர்.<br>
ஜான் எபநேசர், Time Office, K.G.F.<br>
கேர்சோன், Madras Regiment, சென்னை.

Paper Mill, Porayar,<br>
22—7—52.

Regd. No. M.

# அருணோதயம்

## ARUNODAYAM

தமிழ்ச் சுவிசேஷ லூத்தரன் பத்திரிகை

Edited by Rev. S. Gnanamanickam, Rev. D. Rajarigam, M.A., B.D., B.T.
& Mr. G. T. Williams, B.A., L.T.





Vol. 89 No 8 ஆகஸ்ட் 1952

### தியானம்

• ஒருவன் கடவுளின் ஆலயத்தைக் கெடுத்தால் அவனைக் கடவுள் கெடுப் பார்; கடவுளுடைய ஆலயம் பரிசுத்தமுள்ளது; நீங்களே அந்த ஆலயம். 1 கொரி. 3 : 17.

எருசலேமின் அழிவை நினைவு கூரும் திருநாளாக திரித்துவப் பண்டிகைக்குப் பிந்தின 10-ம் ஞாயிறு நியமிக்கப்பட்டிருக்கிறது. எருசலேம் தேவாலயத்தின் அழிவு ஆகஸ்ட் மீ 10-ம் தேதியில் நிறைவேறிற்று. தேவாலயத்தைச் சுத்திகரித்த இயேசுவானவர் என்னுடைய வீடு ஜெபவீடு என்று எழுதியிருக்கிறது, நீங்களோ அதைக் கள்ளர் குகையாக்கினீர்கள் என்று அங்கலாய்ப்புடன் உரைத் தார். உன்னிடம் கல்லின்மேல் கல் இராதபடி செய்வார்கள் என்று இயேசுவானவர் முன்னுரைத்தது எழுத்தின்படி நிறைவேறிற்று. இயேசுவின் எச்சரிப்பை அசட்டை செய்ததின் பலன் அழிவே.

இம்மாதம் 17-ம் தேதியன்று நாம் திரித்துவப் பண்டிகைக்குப் பின்வரும் 10-ம் ஞாயிறைக் கொண்டாடுவோம். அன்றைய தின புதிய நிருப வாக்கியத்தின் கடைசி வசனத்தை நமது தியானத்தின் முக்கிய பொருளாக வைப்போம்.

கல்லாலும், மரத்தாலும் கட்டப்படும் ஆலயம் இவ்வாக்கியத் தில் குறிக்கப்படுவதன்று. ஆத்துமாக்களால் அமைந்த திருச்சபை யாகிய தேவாலயம் இங்கே சொல்லப்படுவது. பரிசுத்த ஆவியின் பண்டிகை தினத்திலே அஸ்திபாரம் போடப்பட்ட இவ்வாலயம் நா ளொருவண்ணம் பரந்து உயர்ந்து கட்டப்பட்டு வருகிறது. இத்திருப் பணியில் ஊழியரும், தலைவர்களும், பல சங்கத்தினரும் ஈடுபட்டி ருக்கிறார்கள். நமது சேவைகளைத் திருச்சபையின் தலைவராகிய இயேசுவானவர் மேற்பார்த்து வருகிறார். பரிசுத்த ஆலயமாகிய திருச்சபையைக் கட்டுவோர் தங்களை இக்காரியத்திற்கென்று பிரித் தெடுக்கப்பட்டவர்களாய், சுயநலம், பொருளாதாயம், அசுத்த எண் ணங்கள் செய்கைகளற்றவர்களாய் உழைத்தாலன்றி ஆலயக்கட்டடம் கெட்டுப்போகும். மத்தியகாலத் திருச்சபையிலும் இப்படிப்பட்ட பல கேடுகள் பெருகினதால் ஆண்டவர் தமது தாசனாகிய லூத்தரை எழுப்பி சபையை சீர்திருத்தும் தொண்டனாய் அவரை உபயோ

கித்தார். சீர்திருத்தப்பட்ட சபையில் தேவவசனமொன்றே சர்வாதிகாரமுள்ள கருவியாய் நின்று நம்மை விசுவாசநிலையில் நிலைக்கச்செய்வது.

தற்காலத் திருச்சபையின் நிலைமையைக்குறித்து நாம் குறைகூற இடமில்லையா? நமது திருச்சபையைத் தேவ ஆவியானவர் தேவவசனத்தைக்கொண்டு ஆண்டு நடத்த நாம் இடங்கொடுக்கிறோமா? தடை செய்கிறோமா? பிரிவினைகளும் குழப்பங்களும் சபைகளில் ஏற்படுவதற்குக் காரணம் யாது? தேவாவியினால் நமக்கு மெய் ஏவுதலும் வைராக்கியமும் ஏற்பட்டதோ? நமது எண்ணங்களுக்குப் பிறர் இணங்காமையினால் உண்டான கோபமோ? பல சந்தர்ப்பங்களில் அமளியற்ற அமர்ந்த வாழ்க்கை நடத்தும் கிறிஸ்தவர்களைத் தங்கள் கட்சிகளில் பலவந்தமாய்ச் சேர்த்து தொற்று நோய்போல் கலக சிந்தையைத் திருச்சபையில் பரவச்செய்வோர் கடவுளின் ஆலயத்தைக் கெடுக்கிறவர்களல்லவா?

குருமாரும் திருச்சபையின் கெடுதலுக்குக் காரணராயிருக்கக் கூடும். சபையாரின் விருப்பங்களையும், நல்ல ஏவுதல்களையும் சிறிதேனும் சட்டைபண்ணாமல் சபையில் சர்வாதிகாரிகளாய் விளங்கும் குருமாரும் உண்டு. அவர்களுக்கு: என் எஜமான் வர நாள் செல்லும் என்று தன் உள்ளத்திலே சொல்லிக்கொண்டு, வேலைக்காரரையும் வேலைக்காரிகளையும் அடிக்கவும், புசித்துக் குடித்து வெறிக்கவும் தலைப்பட்டால், அந்த ஊழியக்காரன் எதிர்பாராத நாளிலும் அறியாத நாழிகையிலும் அவன் எஜமான் வந்து, அவனைத் துண்டித்து, உண்மையில்லாதவர்களோடே அவனுக்குப் பங்கை நியமிப்பான் (லூக். 12 : 46) என்னும் வாக்கியம் பொருந்தும்.

திருச்சபையில் பணவசூல் செய்வதையே பிரதான வேலையாகக் கருதி வேதவசனத்தின் முக்கியத்தையும், ஜெபஜீவியத்தின் அவசியத்தையும் சுவிசேஷ பிரபல்லியத்தின் கடமையையும் மறந்து பிழைப்போர் குருமாராயிருந்தாலும் குருவல்லாதவராயிருந்தாலும் அவர்கள் திருச்சபையின் சீர்கேட்டுக்குக் காரணராவார். ஒரு கட்டடத்தின் ஓர் மூலையிலுள்ள நாலைந்து கற்கள் விழுந்து விட்டால் அங்கு இன்னும் பலகற்கள் விழவும், கட்டடத்திற்கே போரா த்துண்டாகவும் கூடும். திருச்சபையின் அங்கங்கள் ஒவ்வொருவரும் தங்களைத் தற்சோதனைசெய்து சங்கீதக்காரனைப்போல்: கடவுளே, என்னை ஆராய்ந்து, என் இருதயத்தை அறிந்துகொள்ளும்; என்னைப் பரிசோதித்து, என் சிந்தனைகளை அறிந்துகொள்ளும். வேதனை உண்டாக்கும்வழி என்னிடத்தில் உண்டோ என்றுபார்த்து, நித்திய வழியிலே என்னை நடத்தும் (சங். 139 : 23. 24) எனக்கருத்தாய் ஜெபிப்பது அவசியம்.

---

*N.B.*—August 3rd : Collection for Deaconess Fund.





## மறதி

Rev. D. RAJARIGAM, M.A., B.D., B.T.

கற்பவை எல்லாம் மனத்தில் நிலைத்திருப்பதில்லை. அவை மனத்தில் சுவடுகள் விட்டாலும் காலக் கழிவினாலும் வேறு கவர்ச்சியினாலும் மறக்கப்படுகின்றன. இம்மறதியைப் போக்கிக் கற்றதை மாணவர் மனத்தில் இருத்த ஆசிரியர் முயன்று வருகின்றனர். மறதி நமக்கு ஒரு பாக்கியமே. மறதி இல்லையாயின் வாழ்க்கைத் துன்பங்களும், பழையகாலப் பாவங்களும் ஞாபகத்திற்கு வந்து வாழ்க்கையை மகிழ்ச்சியற்றதாக்கிவிடும். என்றாலும், மறக்கக் கூடாதவை பல இருக்கின்றன. கற்றவற்றை மறந்தால் அறிவில் தேர்ச்சி இராது. செய்நன்றி மறந்தவன் நல்வாழ்வடையான்.

இஸ்ரவேலர் தேவன் தங்களுக்குச் செய்த நன்மைகளையும், அற்புதமாக அளித்த விடுதலையையும் மறந்தனர். 'அவருடைய செய்கைகளையும் அவர் தங்களுக்குக் காண்பித்த அதிசயங்களையும் மறந்தார்கள்' (சங். 78 : 11). 'தங்கள் இரட்சகரான தேவனை மறந்தார்கள்' (சங். 106 : 22). 'ஒரு பெண் தன் ஆபரணத்தையும் ஒரு மணவாட்டி தன் ஆடைகளையும் மறப்பாளோ? என் ஜனங்களோ எண்ணிமுடியாத நாட்களாய் என்னை மறந்து விட்டார்கள்' (எரே. 2: 32). அவர்களுடைய இத்தகைய கீழ்த்தரமான குணத்தைக் கர்த்தர் முன்னறிந்தமையால் எகிப்தின் விடுதலையை நினைவுகூரப் பஷாவை ஏற்படுத்தினார். புதிய இஸ்ரவேலாகிய நாமும் நமக்களிக்கப்பட்ட விடுதலையையும் நம் இரட்சகராகிய தேவனையும் மறந்து வருகின்றோம். 'துன்மார்க்கரும் தேவனை மறக்கிற எலலா ஜாதிகளும் நரகத்திலே தள்ளப்படுவார்கள்' (சங். 9 : 17). இப்பெருங் கேட்டிற்கு நாம் ஆளாகாதபடி 'என்னை நினைவு கூருவதற்காக இதைச் செய்யுங்கள்' என்று கூறித் திருவிருந்தை ஏற்படுத்திய ஆண்டவருக்கு ஸ்தோத்திரம்.

நாம் எவற்றை எளிதில் மறக்கின்றோம்? மனத்திற்கு இன்பந் தரும் அனுபவங்கள் எளிதில் மறக்கப்படுவதில்லை. துன்பந் தருபவை மறக்கப்படுகின்றன. கொடுத்த கடனை வாங்க மறவோம், வாங்கிய கடனைக் கொடுக்க மறப்போம். நன்மைகளைப் பெற விண்ணப்பம் செய்ய மறவோம், பெற்ற நன்மைக்கு நன்றி செலுத்த மறப்போம். பானப்பாத்திரக்காரன் யோசேப்பினிடம் தன் சொப்பனத்தைக்கூறி அதற்குப் பொருள் சொல்லும்படி வேண்டினான். பொருளைக் கூறியபின் யோசேப்பு: நீ வாழ்வடைந்திருக்கும்போது என்னை நினைத்து என்மேல் தயவு வைத்து என் காரியத்தைப் பார்வோனுக்கு அறிவித்து இந்த இடத்திலிருந்து என்னை விடுதலையாக்க வேண்டும், என்றான். பானபாத்திரக்காரனோ யோசேப்பை நினையாமல் இரண்டு வருஷகாலமாக அவனை மறந்து விட்டான் (ஆதி. 40 : 23).

நன்மை பெறும்போது வாக்குக்கொடுப்பது வழக்கம். ஆனால், நன்மையைப் பெற்றபின் வாக்கை மறந்து விடுவது இயல்பு. புயற்காற்

றடித்துக் கப்பல் கவிழும் நிலைமையிலிருந்தபொழுது கப்பலோட்டி தன் கப்பல் சேதமின்றிக் கரை சேர்ந்தால் அதிலுள்ள பாய்மரம் உயரத்திற்கு மெழுகுவர்த்தி செய்து கோவிலுக்குக் கொடுப்பதாக வரக்குக்கொடுத்தான். கப்பல் சேதமின்றி கரையை யடைந்தது. கப்பலோட்டி கடைக்குப் போய் காலணாவுக்கு மெழுகுதிரி ஒன்றை வாங்கிக் கோவிலில் வைத்துவிட்டுப் போய் விட்டான். துன்பத்தில் கர்த்தரைப் புகழ்ந்து, துன்பம் நீங்கியபின் அவரை மறத்தலைப் போன்ற மாய்மாலக் கிறிஸ்தவ பக்தி வேறில்லை.

செய்நன்றி மறப்பதும் மனிதருக்கு இயல்பு. நூற்றுக்குத் தொண்ணூறு விழுக்காடு கர்த்தருக்கு நன்றி செலுத்த மறந்துவிடுகிறார்கள். பத்து குஷ்டரோகிகள் ஆண்டவராலே பிணி நீங்கப்பெற்றார்கள். அவர்களுள் ஒருவனே அவருக்கு நன்றி செலுத்தத் திரும்பி வந்தான். 'மற்ற ஒன்பது பேர் எங்கே?' செய்நன்றி மறந்தனர். இரண்டு தூதர் கோவிலுக்கு வந்து சபையார் ஏறெடுக்கும் விண்ணப்பங்களையும் ஸ்தோத்திரங்களையும் தெய்வ சமுகத்திற்கு எடுத்துச் சென்றனராம். விண்ணப்பங்களைச் சுமந்து சென்ற தூதன் அவற்றால் நிரம்பின பையைத் சுமக்க முடியாமல் தூக்கிச் சென்றானாம். ஸ்தோத்திரங்கள் அடங்கிய பையத்தில் ஒரு பங்குகூட நிறையாததால் மற்றவன் அதை எளிதில் தூக்கிச் சென்றானாம். தம் வாழ்க்கையின் முடிவில் தாவீது தாம் ஆடு மேய்த்துக்கொண்டிருந்த கால முதல் தமக்குக் கர்த்தர் செய்த எல்லா நன்மைகளையும் நினைவுகூர்ந்து 'என் ஆத்துமாவே கர்த்தரை ஸ்தோத்திரி. அவர் செய்த சகல உபகாரங்களையும் மறவாதே' என்று பாடினார். இதுவே நன்றியுள்ள கீதம். நன்றி ஓங்க நன்மை ஓங்கும்.

மனிதன் தன் இயல்பான தன்மைகளை அடக்கி ஆளாமல் அவற்றால் ஆளப்படுவானானால் கர்த்தருடைய கற்பனைகளை மறப்பான். ஆனால், தேவ ஆளுகைக்குட்பட்டவன், 'உமது வேதத்தை மறவேன்' (சங். 119 : 153), 'உமது கற்பனைகளை மறவேன்' (சங். 119 : 176) என்று கூறுவான். 'என் வாயின் வார்த்தைகளை மறவாமலும் விட்டு விலகாமலும் இரு' (நீதி. 4 : 5) என்பது சாலமோன் ஞானியின் புத்திமதி. கர்த்தருடைய வேதத்தை இரவும் பகலும் தியானிக்க வேண்டியதிருக்கப் பலர் அதை மறக்கின்றனர். முடிவென்ன? 'நீ உன் தேவனுடைய வேதத்தை மறந்தாய். ஆகையால் நானும் உன் பிள்ளைகளை மறந்து விடுவேன்' (ஓசி. 4 : 6) என்று தேவன் சொல்லுகிறார்.

மறக்கக்கூடாத வேறொரு காரியம் உண்டு. அதாவது நன்மை செய்தல். சுயநலத்தையே நாடுபவர் பிறர் நலங்கருதார். 'நன்மை செய்யவும் தான தர்மம் பண்ணவும் மறவாதிருங்கள். இப்படிப்பட்ட பலிகளின்மேல் தேவன் பிரியமாயிருக்கிறார்' (எபி. 13 : 16).

---



## பெண் பாலார்க்கும் குருப்பட்டமா?

இந்த நூற்றாண்டில் பல சமயங்களில் ஸ்வேதன் திருச்சபையில் ஸ்திரிகளுக்குக் குருப்பட்டம் கொடுக்கலாமா என்ற கேள்வி போடப்பட்டிருக்கிறது. 1923-ம் ஆண்டில் வெகுதிறமைவாய்ந்த பண்டிதர் குழாம் கூடி அதைக் கவனத்தோடு ஆராய்ச்சி பண்ணினார்கள். திரும்பவும் 1946 ல் அப்படிப்பட்ட ஒரு சங்கம் ஏற்பாடாயிற்று. இதன் பண்புள்ள ஆய்வின் பலன் 1950ல் வெளியாயிற்று. இரண்டு சமயங்களிலும் ஸ்திரிகளின் குருப்பட்டத்துக்கு விரோதமாக எவ்வித விசேஷித்த நியாயங்களும் கொண்டு வரப்படவில்லை. அத்தோடு கூட ஸ்திரீகள் குருப்பட்டம் பெறுவதற்கு இடம் உண்டாகும்படி அமுலில் இருக்கும் சட்டத்தை மாற்றும்படி இரு கமிற்றியாரும் யோசனை கொடுத்தார்கள். ஏற்கனவே ஒரு சபைக்கு ஒரு குருவாவது இருந்தால் மட்டும், ஒரு ஸ்திரீ அச்சபையில் போதக ஊழியம் செய்யலாம் என்பது அவர்கள் யோசனை.

இதைப் பற்றிச் சபைக்குள்ளும் சபைக்குப் புறம்பேயும் மிகவும் உயிர்ப்பான தர்க்கங்கள் நடந்திருக்கின்றன. இவ்விஷயத்தால் நேரான கஷ்டத்துக்குள்ளான சபை அதிகாரிகள் மட்டுமல்ல, சபைக்குப் புறம்பே இருக்கும் கல்விக் கழகத்தாரும் அரசாங்க கட்சியாரும் தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவித்திருக்கின்றனர். ஸ்திரிகளுக்கும் குருப்பட்டம் கொடுப்பதைக் குறித்து அவர்களில் யாரும் ஆக்ஷேபிக்கிறதில்லை. பற்பல பகுதியார் குருத்துவம் சகலரும் வகிக்கக்கூடிய பொதுவான உத்தியோகமாகப் பாராட்டுகிறார்கள்; ஆகையால் ஸ்திரீகளும் அந்த உத்தியோகம் பெற சம சிலாக்கியம் உள்ளவர் என்று எண்ணுவார்கள்.

ஸ்வேதன் தேசத்தில் அநேக சபைகள் தங்கள் வட்ட சங்கங்கள் மூலமாய்த் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க சமயம் பெற்றன. பெண்பாலருக்குக் குருத்துவம் அளிக்க அவைகளில் பெரும்பான்மையானவை தீர்மானித்தன.

ஆயினும் இந்த தீர்மானங்கள் vote கணக்கின் பேரில் நின்றபடியால், முழுத்திருச்சபையின் ஏகோபித்தமான அபிப்பிராயமாகப் பாராட்ட நியாயமில்லை. அதற்கு மாறாக திருச்சபையில் வெவ்வேறு வித்தியாசமான அபிப்பிராயங்கள் இருப்பதாகத் தோன்றுகிறது. இரண்டு கமிற்றியாரின் அறிக்கைகளும் இதர அபிப்பிராயங்களும் அதைக்காட்டும். திறமை வாய்ந்த பண்டிதர் 1923-ல் ஸ்திரீகளுக்கு குருப்பட்டம் கொடுக்கலாம் என்கிற யோசனை கொடுத்தார்கள்; ஆயினும் அவர்களில் 4 பேர் தங்கள் அபிப்பிராயத்தை வெளியிடாமல் நிறுத்திக்கொண்டார்கள். அவர்கள் எடுத்துக் காட்டிய பல விஷயங்களில் ஒன்று: தர்க்கங்களில் கொண்டுவந்த வேத வாக்கியங்களின் வியார்த்தி தெளிவற்றதென்பது; மற்றொன்று திருச்சபையார் மிகவும் வித்தியாசமான அபிப்பிராயம் உள்ளவர்கள் என்பது. ஆகையால் இவ்விஷயத்தின் ஆராய்ச்சி சில காலத்

துக்கு ஒத்திவைக்கப்பட வேண்டும் என்றும் ஸ்திரீகளின் பிரத்தியேக குருத்துவத்துக்கடுத்த ஏற்பாடுகளை உடனே செய்ய அவசியமான பிரயத்தனங்கள் நடைபெறவேண்டும் என்றும் யோசனை கொடுத்திருக்கிறார்கள்.

அத்தியக்ஷ ஆதீனங்கள் கொடுத்திருக்கும் அபிப்பிராயங்கள் மிகுந்த வித்தியாசமானவை. அவைகளில் மிச்சமானவை ஸ்திரீகள் குருப்பட்டம் பெறும் பிரரேபணையைப் புறக்கணிக்கும். அப்படி அவர்கள் புறக்கணிப்பதின் நோக்கங்களும் வித்தியாசமானவை. குருமாரின் ஐக்கிய சங்கங்கள் ஆராய்ச்சி கமிற்றியாரின் பிரரேபணைகளுக்கு எதிர் பேசுகின்றன. இதன்சம்பந்தமாய் Lund, Uppsala சர்வகலாசாலைகளில் புதிய ஏற்பாட்டை விஸ்தரிக்கும் பண்டிதரும் உபந்நியாசகரும் ஒன்று கூடி ஒரு விளம்பரம் வெளியிட்டிருக்கிறார்கள். அதில் பின்கண்டிருக்கிறது: "எங்கள் அபிப்பிராயத்தில் ஸ்திரீகள் குருப்பட்டம் பெற இடம் கொடுப்பது புதிய ஏற்பாடோடு ஒத்துவராது; அப்படிப்பட்ட ஒழுங்கு பரிசுத்த வேதத்துக்கு நம்மை துரோகிகளாக்கும்."

இந்த விஷயம் முழுவதும் பல வித்தியாசமான சந்தர்ப்பங்களைக் கவனித்தே கருதப்பட்டது. பரிசுத்த வேதமும் லுத்தரன் சபையின் அறிக்கைகளும் இந்தக்கேள்விக்குச் சொல்லும் பதில் என்ன என்று அறிவதே பிரதான காரியம். புதிய ஏற்பாட்டின்படி ஆண்பாலார் மட்டுமே குருமாராயிருக்கலாம்என்பதில் சர்வ கலாசாலை பண்டிதருக்கு அநேகர் சார்பாயிருப்பார்கள். அப்படி யோசிப்பவர்கள் கிறிஸ்தவ சபைக்கு இது ஒருவாறு முக்கியமானது என்றும் எண்ணுவார்கள். திருச்சபை கிறிஸ்துவின் சரீரமாயிருக்கிறதென்றும் பரி: பவுலின் அபிப்பிராயப்படி அது ஒரு ஸ்திரீயாயிராமல் கிறிஸ்துவின் மகிமையைப் பிரதிவிம்பிக்கிற புருஷனாயிருக்கிறதென்றும், திருச்சபையின் ஆராதனையில் ஸ்திரீக்கு இருக்கும் பங்கைப் பற்றி பரி: பவுல் சொல்லுகிறதைப் பக்தி வினயத்தோடு அங்கீகரிக்க வேண்டுமென்றும் இது சம்பந்தமாய் எடுத்துக் காட்டப்படுகிறது. இவர்கள் உபயோகிக்கும் இதர நியாயங்களும் உண்டு: அப்போஸ்தலர் அனைவரும்மட்டுமல்ல, கிறிஸ்து அனுப்பின 72 பேரும் புருஷரே என்றும் காட்டுகிறார்கள். குருமாரின் ஊழியம் அப்போஸ்தலரின் ஊழியத்தின் தொடர்பாயிருக்கிறபடியால் ஸ்திரீகளை இதற்குள் கொண்டு வருவதால் திருச்சபையின் விசேஷித்த பெலனை பயங்கரமாய்ப் பங்கப்படுத்துவதாகும் என்றும் சொல்லுவார்கள்.

மறுபட்சத்தில் வேதசாஸ்திரத்தின் சிக்கலான விஷயங்களை செம்மையாய் ஆராய்ச்சி செய்த ஆராய்ச்சி கமிற்றியின் அவயவங்களில் பெரும்பாலார் குருமாரின் ஊழியத்துக்கு ஆண் பெண் எனும் பேதம் பிரதானமல்ல என்று நினைக்கிறார்கள். 'ஸ்திரீகள் சபையில் பேசாமலிருக்கட்டும், பேச அவர்களுக்கு உத்தரவில்லை, அவர்கள் அடங்கியிருக்கட்டும்,' என்று பரி: பவுல் சொல்லுகிற வார்த்தைகளை



வேறு விதமாகவும் விஸ்தரிக்கிறார்கள்; அவைகள் கிறிஸ்தவ விசுவாசத்தின் பிரதான பிரமாணத்தின்பேரில் எவ்விதமும்ஆதாரப்படாமல் பூர்வத்தில் பொதுவாய் ஸ்திரீகளைக் குறித்துக் கருதப்பட்ட அபிப்பிராயத்தை வெளிப்படுத்தும். ஆகையால் அவைகள் எக்காலத்துக்கென்றும் சபையைக் கட்டுப்படுத்துவதாக எண்ணக்கூடாது. பொதுவாய்ச் சொன்னால் ஆண் பெண்ணுக்குரிய சம்பந்தம் தர்க்கிக்கப்பட்ட விஷயங்களில் ஒரு முக்கிய அம்ஸம். குருமாராகும்படி ஸ்திரீகளுக்கு இடம் கொடுப்பது Ecumenical movementல் ஸ்வேதன் சபையின் நிலைக்கு ஆபத்தாகும் என்று சிலர் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்துக்கொண்டார்கள். ஸ்வேதன் தேசத்தில் எவ்விதத் தீர்மானமும் செய்யுமுன் இந்த விஷயத்துக்கு Ecumenical முடிவு எப்படியிருக்குமென்று காத்திருக்க விரும்புகிறவர் சிலர். ஸ்வேதன் சபை இவ்விஷயத்தில் சுவாதீனமாய் நடந்து கொள்ளலாம் என்று நினைப்பவர் வேறு பேர்.

இப்படிப்பட்ட தர்க்கம் நடக்கும்போது நடைமுறையில் உண்டாகும் வேறு விதமான கஷ்டம் புலப்பட்டது. விசேஷமாய் இக்காலத்தில் கிறிஸ்தவ குடும்பம் வீட்டின் நலத்துக்காகவும் குடும்பத்தின் நன்மைக்காகவும் உறுதிநிலை பெறுவது மிகவும் முக்கியமாகத் தோன்றுகிறது. இயல்பாகவே புருஷனைவிட வீட்டோடும் தன் பிள்ளைகளோடும் நெருங்கின சம்பந்தமுடையவள் ஸ்திரீயே. விவாகம் செய்த பெண்பாலாரின் நேசபக்திக்குப் பிரிவினை உண்டாகும்; குடும்பத்துக்குரிய நேசபக்தியாகவும் குருத்துவத்துக்குரிய உண்மையாகவும் இருவகையாகும். கிறிஸ்தவ அபிப்பிராயப்படியே ஒரு மனைவியாகவும் தாயாகவும் குடும்பத்துக்கு உண்மையாயிருக்க வேண்டும். இரு கடமைகளின் போராட்டத்துக்குள் இப்படிச் சதாவாய் ஜீவிக்க வேண்டியவளாயிருப்பாள். இதற்கு ஒன்றான நிவர்த்தி: பெண் குருக்கள் விவாகம் செய்யக்கூடாது என்று நிர்ணயிப்பதே. இதுவோ சுவிசேஷ லுத்தரன் போதனைக்கு விரோதம்.

இக்காரியங்களைப்பற்றிய அபிப்பிராயங்கள் அநேகமாய் வேறுபடும். பொதுவாய்ச் சொல்லின், திருச்சபையின் வேலையைக் குறித்துக் குறைவான அக்கறையுள்ளவர்கள்தான் பெண்கள் குருமாராவதைக் குறித்து வெகுவாய் சிரத்தை எடுத்துக் கொள்ளுகிறார்கள் என்பது உண்மை. திரும்பவும் பொதுவாய்ச்சொல்லின், திருச்சபையின் ஜீவியத்தில் பங்கும் பாகமும் உள்ளவர்களோ இக்காரியத்தில் அதிக தாமத சிந்தை உடையவர்களாகவும் சில விஷயங்களில் எதிர்ச் சிந்தைக் காரராகவும் விளங்குவார்கள். ஒருவேளை முன்போலவே முழுச்சங்கதியும் திரும்பவும் எதிர்காலத்துக்கென்று ஒத்திவைக்கப்படும்.

(மொழிபெயர்ப்பு) S. D. G.

---

## சந்நியாஸியின் இரகஸ்யம்.

பல்லாண்டுகட்கு முன்னே பிரான்ஸிஸ்கன் சந்நியாசக் கூட்டத்தார் அமெரிக்காவில் டெக்ஸாஸ் என்ற மாகாணத்தில் திருப்பணியாற்றி வந்தார்கள். அவர்களில் ஒருவன் பரிசுத்தவானுகை மதிப்புப்பெற்றான். அவன் எப்போதும் சந்தோஷமாய் இருந்தான். அவன் முகத்தில் இடையறாமல் புன்னகை விளங்கிற்று. ஊழியம் செய்யக்கூடிய சமயங்களைக்குறித்து அவன் கண்கள் கவனிப்பாயிருந்தன. வியாதியஸ்தரிடம் அவன் சென்றபோதெல்லாம் வியாதிகள் நீங்கின. குருடர் பார்வை அடைந்தார்கள். சப்பாணிகள் நடந்தார்கள். இதை மடாதிபதி கேள்விப்பட்டு அந்த வாலிப சந்நியாஸியைக் கூப்பிட்டு அவனுடைய தின அலுவல்களைக் குறித்து உற்று விசாரித்தான். பொதுவாய் அக்கூட்டத்தாருக்கு விதிக்கப்பட்ட சட்டதிட்டங்களையே அனுசரிப்பதாக வாலிபன் பதிலளித்தான். 'என் மகனே, சரியாய் யோசித்துப்பார், எதையாவது நீ ஒரு வேளை மறந்திருக்கலாம்; ஏதோ ஒரு ரகஸ்யம் இருந்தால் அதை எனக்கு மறைக்காதே' என்று மடாதிபதி கூறினான். சிறிது நேரம் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டே மௌனமாயிருந்தார்கள். 'ஆம், நான் மறந்தது ஒன்று உண்டு' என்று வாலிபன் சொல்லவே, 'என் மகனே, அது என்ன' என்று அதிபதி வினவினான். 'உம்முடைய சித்தம் பரமண்டலத்தில் செய்யப்படுகிறதுபோல் பூமியிலேயும் செய்யப்படுவதாக என்று நான் அடிக்கடி ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் வார்த்தைகளை உச்சரிப்பேன்' என்றான். இதுவே அற்புதங்களின் இரகஸ்யம். மெய்யாகவே கர்த்தருடைய ஜெபம் சகல ஜெபங்களுக்கும் மேலான ஜெபம். பூலோகத்தின் உற்பத்தி முதல் செய்யப்பட்டதும் அதன் முடிவு மட்டும் செய்யப்படப்போவதுமான சகல ஜெபமும் அதில் அடங்கி இருக்கிறது. அது தெய்வத் தன்மை பொருந்தியது. அதன் வல்லமை அளவற்றது. விசுவாசத்தோடு இந்த ஜெபத்தை ஜெபிக்கிறவன் பரலோகத்தைப் பூமிக்குக் கொண்டுவருவான். தனி ஆட்களிலும், ஜாதிகளிலும் மாறுதல் உண்டாக்குவான். தன்னயத்தைப் போக்குவான். பூமியின்மேல் சமாதானமும் ஜாதிகளுக்குள்ளே நல்லிணக்கமும் பெருகச்செய்வான். சந்நியாஸியின் இருதயமாகிய பீடத்தினின்று தேவனை இணைக்கும் இயேசு நாதரின் வார்த்தைகள் தேவனண்டை ஏறிக்கொண்டேயிருப்பதால், அவன் அபாத்திரராகிய நமக்குத் தாராளமாய் ஜீவனையும் எவ்வித நல்லீவுகளையும் கொடுத்துக்கொண்டே இருக்கிற தேவனுடைய சர்வவல்லமையுள்ள வசனத்தோடு ஐக்கியமானான். நமக்குள்ளும் உலகமெங்கும் தேவசாயலாகிய அதிசயத்தைச் செய்ய விரும்புகிற இந்த தெய்வீக ஜெபத்தின் வல்லமையை நாம் பார்க்கவும் உபயோகிக்கவும் மாட்டோம் என்றிருந்தால், நாம் மனுஷராய்ப் பிழைக்காமல் ஒரு குருட்டுத்தனமான மிருக ஜீவியத்தைப் பேணிவருவோம்.

(மொழி பெயர்ப்பு) S. D. G.

---





## சுசீலாவின் மாண்பு

"நளினி"

காலை மணி 9 ஆகிவிட்டது. பள்ளிக்கூடம் தொடங்க இன்னும் அரைமணி நேரம்தான் இருக்கிறது. "சுசீ!" என்று கூப்பிட்டவண்ணம் வந்தாள் அம்புஜா. "என்ன அம்பு! ஏன் இன்று இவ்வளவு நேரம்? எங்கு போயிருந்தாய்? நீ இன்று வர மாட்டியோ எனக் கலங்கினேன். வா வா நேரமாய் விட்டது, கெதியில் போவோம்" என்று கூறினாள் சுசீலா.

சுசீலா பணக்கார வீட்டுப்பிள்ளை. ஒரே ஒரு பிள்ளை. பெற்றோர்
செல்லமாய் வளர்த்து வந்தனர். அம்புஜா அதே கிராமத்தில்
வசித்து வந்தாள். அவள் பெற்றோர் பரம ஏழைகள். அவள்
சிறியவயதாய் இருந்தபோதே தன் தகப்பனை இழந்தாள். தாய்தான்
பலவீடுகளிலும் போய் வேலைசெய்து கொடுத்து தன் ஒரே ஒரு
மகளைப் போஷித்துப் படிப்பித்து வந்தாள்.

சுசீலாவும் அம்புஜாவும் ஒரே பள்ளிக்கூடத்தில், ஒரே
வகுப்பில் படித்து வந்தனர். அம்புஜாவின் அரிய குணத்தை அறிந்த
சுசீலா அவள் ஏழையாக இருந்தாலும் அவளில் அதிக அன்பு
வைத்தாள். இரண்டுபேரும் இணைபிரியா சினேகிதரானார்கள்.
சுசீலா எங்கிருந்தாலும் அம்புஜாவை அங்கு காணலாம். அம்புஜா
எங்கிருந்தாலும் சுசீலாவை அங்கு காணலாம். இவர்கள்
இருவரும், அதாவது ஏழைப்பிள்ளையும் பணக்காரப்பிள்ளையும்
சினேகிதராய் இருப்பது அவர்களின் பள்ளிக்கூடத் தோழிகளுக்குப்
பிடிக்கவே இல்லை. எல்லாரும் சுசீலா பணக்காரியானபடியால்
தான் அம்புஜா அவள் பின்னுக்குத் திரிகிறாள் என்று குசுகுசுத்
தனர், கேலி பண்ணினர், சிரித்தனர். ஆனால் சுசீலா ஒன்றுக்கும்
அசையவில்லை. சுசீலாவின் தாய்க்கும் சில மாணவிகள் போய்
"சுசீலா பிச்சைக்காரப் பெண்ணிடம் சினேகமாய் இருக்கிறாள்"
எனக் கோள் மூட்டினர். சுசீலாவா இதற்கு அஞ்சுவது? பள்ளிக்
கூடம் தொடங்கிற்று. தவணைப் பரீட்சைக்கு இன்னும் ஒரு
கிழமை இருப்பதால் எல்லாரும் தாங்கள் தாங்களே தங்கள் பாடங்
களைப் படித்துக்கொண்டிருந்தனர். சடுதியாய் பள்ளிக்கூடத் தலைவி
அங்கு வந்தாள். எல்லாப் பிள்ளைகளும் எழுந்து வணக்கம் செலுத்
தினர். பின் எல்லாரும் உட்கார்ந்த பின், "தவணைப் பரீட்சை வரு
வதற்கு ஒரு கிழமைதான் இருக்கிறது. அதற்கு முன் எல்லோரும்
பள்ளிக்கூடச் சம்பளம் கட்டியாக வேண்டும். இல்லா விட்டால்
பரீட்சை எடுக்க முடியாது" என்று கண்டிப்பாய் உரைத்துவிட்டு,
"இதுவரை சம்பளம் கட்டாதவர்கள் எழுந்திருங்கள்" என்றாள்
தலைவி. வகுப்பில் ஒரே அமைதி. எல்லாரும் ஒருவரை
ஒருவர் பார்த்தனர். சடுதியாய் எழுந்தாள் ஒரு பெண். அவள்
தான் அம்புஜா. எல்லாரும் கொல்லென நகைத்தனர். அம்புஜாவின்
கண்களில் கண்ணீர் நிறைந்தது. "இந்த ஒரு கிழமைக்குள்

கட்டியாக வேண்டும். இல்லா விட்டால் நீ இந்த வகுப்பில் சித்தியடைய முடியாது. இவ்வளவுகாலமும் வகுப்பில் முதற்பிள்ளையாய் இருந்தாலும் இந்த வகுப்பில் சித்தியடைய வேண்டுமானால் இந்தக் கடைசித்தவணைப் பரீட்சையை எடுத்துத்தான் ஆகவேண்டும், தெரியுதா?" என உறுமிவிட்டு போனார் பள்ளிக்கூடத் தலைவி.

பள்ளிக்கூடம் விட்டது. அம்புஜா கெதியில் வீட்டுக்குப்போகப் புறப்பட்டாள். சுசிலாவும் அவளைப் பின்பற்றினாள். "அப்பு, நீ கவலைப்படாதே. நான் உன் சம்பளத்தைக் கட்ட ஒரு வழி பார்க்கிறேன். நீ கவனமாய்ப் படி, கவலைப்படாதே" எனத் தேற்றினாள் சுசீலா. "சுசீ— நான் என்ன செய்வேன். அம்மா ஒரு கிழமையாய் வேலைக்கே போகவில்லை, காய்ச்சலாய்ப் படுத்திருக்கிறாள். மிச்சம் பிடித்துவைத்த காசெல்லாம் முடிந்துவிட்டது. இன்று 'காலை இரண்டொருவரிடம் கடன் கேட்டுப்பார்த்தோம், கிடைக்கவில்லை" எனக் கூறிக்கொண்டே விம்மி விம்மி அழுதாள் அம்புஜா. சுசீலா அவளைத் தேற்றிவிட்டு அவளை வீட்டிற்கு அனுப்பிவிட்டுத் தன் வீட்டிற்குப் போனாள். சுசீயின் தாய் சுசீலா வர அன்று நேரஞ் சென்று விட்டபடியால்ஆவலுடன் வாசலில் நின்று பார்த்தவண்ணம் நின்றாள். சுசீலாவைக் கண்டவுடன் கட்டியணைத்துக் கொண்டு "என் கண்ணு சுசீ! என் இவ்வளவு நேரம். உன்னை அல்லவா அந்தப் பிச்சைக்காரப் பெண் அம்புஜாவுடன் திரியவேண்டாமென எத்தனையோ தரம் சொன்னேன். நீ கேட்கிறாயில்லை. வாடி சாப்பிட" எனக் கரிசனையோடு கூட்டிக்கொண்டு போனாள் சாப்பாட்டு அறைக்கு.

அம்புஜாவின் கஷ்டத்தை எண்ணும்போது சுசீலாவிற்கு என்ன செய்வதெனத் தோன்றவில்லை. சாப்பிடவும் மனமில்லை. அடுத்த நாள் பள்ளிக்கூடம் விடுதலை. சுசீலாவின் பிறந்த நாளும் அன்று வந்தது. பணக்கார வீட்டுப் பிள்ளையல்லவா? அநேக விதமான விளையாட்டுச் சாமான்களும், பட்டுச்சட்டையும், பல விதமான பட்டாசுகளும், வாணங்களும், ஒரு அழகிய "மணிபர்ஸ்சும்" அவளுக்குத் தன் தகப்பன் தாய் இன சுற்றத்தாரிடமிருந்து கிடைத்த வெகுமதிகள். தகப்பன் கொடுத்த "மணிபர்சை"த் திறந்தாள். என்ன ஆச்சரியம்! அதற்குள் 10 ரூபாய் நோட்டு ஒன்று இருந்தது. உடனே அவளுக்கு ஒரு யோசனை தோன்றிற்று.

தன் தாயைக் கூப்பிட்டுச் சொன்னாள். "அம்மா, நான் மாத்திரம் இவற்றை அனுபவிப்பதில் எனக்கு ஒரு சந்தோஷமுமில்லை. என் பிரியமான தோழி அம்புஜா வீட்டிற்குப் போகப் போகிறேன். அவளையும் இன்று சந்தோஷப்படுத்தப் போகிறேன். அவள் சந்தோஷப்பட்டால்தான் எனக்கு சந்தோஷம்" என்றாள். இந்த நல்ல தினத்தில் சுசீலாவை அழவைக்கக் கூடாதென எண்ணி தாயார் தன் சம்மதத்தைத் தெரிவித்தாள். உடனே சுசீலா பலகாரங்களில் சிலவற்றையும், பட்டாசையும், தனக்குக் கிடைத்த சில வெகுமதி



களையும் எடுத்துக்கொண்டு அம்புஜாவீட்டிற்குப் புறப்பட்டாள். இவள் அம்புஜா வீட்டிற்குப் புறப்பட்டதைக் கண்ட இவள் தகப்பன் இவளை அறியாமலே பின் தொடர்ந்தார் இவர்கள் இருவரும் என்ன செய்கிறார்களென்பதைப் பார்ப்பதற்காக.

சுசீலா போனதும் உடனே "அம்பு ஓடியா. இதோ என்னுடன் வந்து விளையாடு. நீ சந்தோஷமாயிருந்தால்தான் நானும் சந்தோஷமாயிருப்பேன்" என்றாள். பின், சிறிது நேரத்தில், "அம்பு நீ இனி கவலைப்பட வேண்டியதில்லை. உன் சம்பளத்தைக் கட்ட காசும் கிடைத்துவிட்டது. அப்பா எனக்கு பிறந்த நாள் பரிசாக பத்து ரூபாய் தந்தார். இந்தா இந்த மூன்று ரூபாயையும் வைத்து உன் தாயாருக்கு வேண்டிய சாப்பாட்டுச் சாமான்களை வாங்கு. மிகுதி ஏழு ரூபாயையும் நாளைக்கே உன் சம்பளக்காசெனக் கட்டிவிடு" என்று சொன்னாள். அம்புஜா எவ்வளவு மறுத்தும் சுசீலா அதைப் பெறும்படி வற்புறுத்தினாள்.

இவற்றையெல்லாம் கவனித்த சுசீலாவின் தகப்பனார் சந்தோஷமிகுந்தவராய் ஓடிவந்து சுசீலாவை கட்டியணைத்து "எங்களை நல்வழியில் வழிகாட்ட வந்த என் சுசீ! உன் தயாள குணத்தை மெச்சினேன். உன் அரிய குணத்தால் நான் மனம் மாறினேன். உன் தாயும் மாறி விட்டாள். இனி நாங்களே உன் தோழி அம்புஜாவைப் படிப்பிப்போம்" என்று அன்பு ததும்பக்கூறி விட்டு, அம்புஜாவுக்கும் தாய்க்கும் வேண்டிய பணத்தைக் கொடுத்துவிட்டு சுசீலாவைக் கூட்டிக்கொண்டு வீட்டுக்குப்போனார்.

உதயதாரகை. 27-6-1952

---

## கிறிஸ்தவர்களும் லளித கலைகளும். (தொடர்ச்சி)

இனி, படக்காட்சி. நாம் வசிக்கும் காலம் படக்காட்சியின்மூலமும் ரேடியோ மூலமும் அறிவைப் புகட்டக்கூடியகாலம். காட்சிக்கல்வி கல்லூரிகளில் நடைபெற்று வருகின்றது. நாம் வெள்ளித்திரையை கிறிஸ்து மார்க்க சாதனமாக இன்னும் உபயோகிக்க ஆரம்பம் செய்யவில்லை எனக் கூறின் மிகையாகாது. சாம்சன் (Samson-Delyla), ஞானசவுந்தரி, ஏழைபடும்பாடு என்ற பெயர் பூண்டுள்ள பேசும் படங்கள் கிறிஸ்தவ படங்களாக வெளி வந்துள்ளன. இவை உண்மையில் கிறிஸ்தவ பண்பாட்டையோ, கிறிஸ்தவ சமயத்தின் முடிந்த முடிவுகளையோ உள்ளது உள்ளவாறே காட்டக்கூடியவைகளாக இல்லை. சில மேல்நாட்டுக் கிறிஸ்தவ பேசும் படங்களை நம் நாட்டிற்கு ஏற்றவாறு மொழிபொருத்தமுள்ள தாக்கி (Dub), வினியோகம் செய்தால் தாவிளை; புதிதாக கிறிஸ்தவ பள்ளிக்கூடங்களையோ ஸ்தாபனங்களையோ ஏற்படுத்துவதை சிறிது காலம் நிறுத்தி இப்படிப்பட்ட முயற்சிகளில் வெளிநாட்டு மிஷனரிமார் முயற்சி செய்வது நன்மை பயக்கும்.

பேசும் படக் காட்சிகளைப்பற்றி மூன்று வித அபிப்பிராயங்கள் உள. சென்ற தலைமுறையைச் சேர்ந்தவர்கள் அதைச் சிற்றின்பம் என்றும் பேயின் சோதனைக்கு உள்ளாக்குவதென்றும், கூறுவர். இக்கால இளைஞர்கள் அதை உற்சாக மூட்டக் கூடிய பொழுது போக்காகக் கொள்வர். இன்னொரு கருத்தும் உண்டு, சிற்சில சமயங்களில் ஒழுக்க நெறியை பாதிக்காதபடி அறிவிற்கு ஊட்டம் கொடுக்கக் கூடிய படங்களைப் பார்த்தால் நலம் என்பதே அது. ஆனால் ஒன்று நிச்சயம். பேசும் படம் மக்களின் வாழ்க்கையில் ஒரு முக்கிய இடம் வகித்து வருகின்றது. படித்தவர்களும் பாமரர்களும், ஏழைகளும் பணக்காரரும், குருக்களும் குரு அல்லாதவர்களும் படம் பார்க்கச் செல்கின்றனர். ஏன் இப்படக்காட்சியாகிய சாதனத்தை கிறிஸ்துவுக்கு மக்களை ஆதாயப்படுத்தக்கூடியதொன்றாகக் கொண்டு முயற்சிசெய்து வெற்றியடையக்கூடாது?

இங்கு வில்லுப்பாட்டு எனப்படும் சுவிசேஷ வேலைக்கு உபயோகப்படக்கூடிய சாதனத்தையும் குறிப்பிடல் வேண்டும். இது கிராம மக்களுக்கு விசேஷமாக ஏற்றது. இச்சாதனத்தைக் கொங்கு நாட்டில் உபயோகப்படுத்த நம் கிறிஸ்த சிஷ்ய சங்க காரியதரிசி முயற்சித்து வருவது பாராட்டலுக்குரியது. இச்சாதனத்தின் மூலம் இசையும், சம்பாஷணையும் சாத்தியமாகின்றது.

இனிமேல் கட்டடக் கலையைப்பற்றி சிறிது கூறுதல் வேண்டும். தென் இந்தியப் போக்கிலே கட்டப்பட்ட கிறிஸ்தவ ஆலயம் வட ஆற்காட்டு திருப்பத்தூரிலே உள்ள கிறிஸ்து குல ஆசிரம ஆலயம் ஒன்றே. சுதந்திர இந்தியாவில் இப்படிப்பட்ட கோவில்களே ஏற்றவை. ஆயினும் மேல்நாட்டு முறையை அனுசரித்து உருவாக்கப்பட்ட ஆலயங்கள் இனி இருக்கவேண்டாம் என்பதல்ல. அவ்வாலயங்களில் கலை நுட்பங்களை நாம் அறிந்தால் நமது பக்திக்கும் வழிப்பாட்டிற்கும் அவை சாதகமாக இருக்கும். நம் தற்கால ஆலயங்களில் பல கடவுள் வழிபாட்டிற்கு உதவுவதாயும், சில ஊறு விளைவிக்கக் கூடியவையாயும் இருப்பது கண்கூடு. இந்திய கிறிஸ்தவர்களில் எத்தனைபேருக்கு அவர்கள் வழிப்படும் ஆலயங்களிலுள்ள காதிக் (Gothic), ரோமன் கலை அம்சங்கள் யாவை என்றும் அவற்றின் அழகு, பயன் அம்சங்கள் என்னவென்றும் தெரியும்? இவ்வகை அறிவிலும் வழி நடத்த தலைவர்கள் முன்வருவார்களாக.

இனி, ஓவியம். கிறிஸ்து பிறப்பு, மரியாளாகிய தாயும் இயேசுவாகிய சேயும், கெத்சமனே காட்சி ஆகியவற்றைப் பற்றிய சில படங்களை நாம் அறிவோம். கிறிஸ்தவ சமய சம்பந்தமான ஓவியங்களிலும் காவியங்களிலும் சீர்திருத்தப்பட்ட சபைகளைவிட ரோமன் சபையினர் அதிக நாட்டமும் உற்சாகமும் கொண்டுள்ளனர். இன்னும் நமது சில கிறிஸ்தவ கோவில்களிலும் வீடுகளிலும் அங்கங்கள் சரியான அளவிற்கு இல்லாத குட்டையான,



நெட்டையான கிறிஸ்துவின் படங்கள் இருக்கின்றன. இவற்றை நீக்கி அழகும் அருளும் பிரதிபலிக்கும் ஓவியங்களை நமது ஆலயங்களிலும் இல்லங்களிலும் வைத்து இன்புற முயலுவோமாக.

தா. ஐ. ஏசுதாஸ்

---

### கோயிலில் பாதிரியார்.

“கோயில்” என்று சிறப்பாக அழைக்கப்படும் பதி சிதம்பரம். இது சைவர்களின் கோட்டை. இவ்வாண்டு இவ்வூரின் புகழ் பெற்ற நடராஜா கோவிலில் ஆனித் திருமஞ்சன திருவிழாவின் எட்டாவது தினத்தில் ஓர் புதுமை நடந்தது. ராஜசபை என்றழைக்கப்படும் ஆயிரங்கால் மண்டபத்தில் எட்டாம் திருமுறை எனப்படும் திருவாசகத்தை அருளிய மாணிக்க வாசகரது நாளைக்கொண்டாட பலரும் குழுமி இருந்தனர்.

கூட்டம் ஆரம்பிக்கும் சமயத்தில் இந்த நடன சபையில் ஓர் நாட்டையர் தோன்றினர். உடனே அவரும் அன்று பேசவேண்டுமென்று அறிஞர் பலர் வற்புறுத்தினார்கள். அவரும் ஒப்புக்கொண்டார். சுவிசேஷ வேலை நடைபெறவேண்டிய முறையைப் பற்றி பல இடங்களில் பேசிவரும் நம் போதகர் வியக்கத்தக்க முறையில் அன்று அவ்வூழியத்தை செய்து காட்டியத்திறனை நினைக்கும் போதெல்லாம் சிந்தையெல்லாம் இனிக்கின்றது; மயிர் சிலிர்க்கின்றது; உள்ளம் இறும்பூதெய்துகிறது. ஏனெனில், பேசப்பட்ட இடம் நடனசபை. பேச்சை செவிமடுத்து அனுபவித்தோர் தமிழ்நாட்டின் பல பாகங்களிலிருந்தும் இலங்கையிலிருந்தும் வந்த பழுத்த சைவர். இவ்விழாவிற்கு ஏற்பாடுசெய்தவர் குன்றக்குடி மகாசந்நிதானம். தலைவர் சென்னைப் பன்மொழிப்புலவர் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார். பேசப்பட்ட இடம் சேக்கிழார் பெரியபுராணம் அரங்கேற்றிய இடம்; இவ்விடத்தில் ஐம்பது ஆண்டுகளுக்குமுன்புதான் (பிராமணரல்லாத) சைவர்கள் உரைநிகழ்த்த தில்லைவாழ் அந்தணர்களால் அனுமதிக்கப்பட்டனர். இச்சூழலில் ஒரு கிறிஸ்தவப் பாதிரியார் புகுந்து சைவத்தையும் கிறிஸ்தவத்தையும் ஒப்பிட்டுப் பேசி பாராட்டலையும் பெறக்கூடியதாயிருந்தால், இவ்வளவு காலம் நடைபெறாத இந்நிகழ்ச்சியை அற்புதமெனக்கூறாது வேறென்னவென்றுரைப்பது?

விழாவிற்கு தலைமை தாங்கிய பெரியவர் தம் பேச்சிற்கிடையே ஜி. யு. போப் ஐயர் அஞ்ஞானிகளுக்கு உபதேசிக்கவந்து, திருவாசகத்தில் ஈடுபட்டு அதனை மொழி பெயர்த்தார் என கூறியதற்கு மாற்றாக நம் பாதிரியார் மாணிக்கவாசகருக்கு ஏற்பட்ட கடவுள் அனுபவம், ருசி சற்றேனும் உள்ளவர்களே அவ்வாறு செய்ய முடியும்; போப்பையரும் அவ்வனுபவம் உள்ளவர் என்று எடுத்துக் கூறினார். மேலும், இந்த போப்பையரின் மொழிபெயர்ப்பை படித்த கர்மானியராகிய பிரரிடிக் ஹைலர் அதில் ஈடுபட்டு அதின் சில

செய்யுட்களை ஜர்மானிய மொழியில் ஆக்கி தமது "ஜெபம்" என்ற புத்தகத்தில் சேர்த்துள்ளதை ஒப்புக்கொண்டு, தில்லையிலேயே ஐம்பது ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்த ஷோமேருஸ் ஐயர் மொழி பெயர்ப்பையும் கவனத்திற்குக் கொண்டு வந்தார்.

மற்றும், கடவுளின் அருள் திறத்தை மாணிக்கவாசகர் பால் சோற்றை மறுக்கும் பிள்ளையை தாய் அடித்து ஊட்டும் திறத்திற்கு ஒப்பிட்டுப் பேசுவதை எடுத்துக்காட்டியும், கண்ணப்பரின் அன்பு நிறைந்த தன்மை மாணிக்கவாசகரது அன்பற்ற தன்மை கடவுளின் வான்கருணை ஆகிய மூன்றையும் தவளகிரி, கிஞ்சின் ஜங்கா, எவரெஸ்ட் சிகரங்களிற்கு ஒப்பிட்டுக்காட்டியும், வலிய வந்தாட் கொள்ளும் கடவுளின் அருளை விளக்க ஏசுபெருமான் பிணியாளன்—வைத்தியன் உவமையை உபயோகித்த கருத்தினை விளக்கியும் சபையினது கவனத்தைக் கவர்ந்து கொண்டார்.

நம் போதகர் தம் பேச்சை ஆரம்பிக்கும் பொழுது : தான் ஓர் கிறிஸ்தவன் என்றும், அதிலும் பாதிரியார் என்றும், கூறியது மேலே அவர் பேச்சிற்கு அடிப்படையாகவும் கிறிஸ்துவிற்கு சாட்சி பகர்வதாகவும் விளங்கிற்று, கூட்டமுடிவில் காரைக்குடி சா. கணேசன் அவர்கள் நம் பாதிரியாரை பாராட்டியதும், "கலைமகள்" ஆசிரியர் கிவா ஜகநாதன் சைவர்களாகிய எங்களை தலைகுனிய செய்து விட்டீர்கள் என்று வாழ்த்தியதும் இங்கு குறிப்பிடத்தக்கன.

சைவ உலகத்துட் புகுந்து அங்கு கிறிஸ்தவ சமய போதனையையும், கிறிஸ்தவ உலகில் கிறிஸ்தவ கொள்கைகளோடு சைவசமய உண்மைகளையும் ஒப்பிட்டு விரிவுரைகள் வழங்கிவரும் பெரியார் மறைத்திருவாளர் சி. வி. ச. அவர்கள் தொண்டை ஆண்டவர்தாமே பலிக்கச் செய்வாராக. தா. ஐ. ஏசுதாஸ்

---

## சுவிசேஷ சபையில் சீமோனியம்.

அப்போஸ்தலர் நடபடியில் (8, 18) இந்தப்பாவம் கண்டிக்கப்படுகிறது. வைதீக லௌகீக உத்தியோகங்கள் விற்பனையான காலங்கள் திருச்சபையின் சரித்திரத்தில் கவனிப்புக்குரியன. இதற்கு விரோதமாக வல்லமையாய்ப் போராடினவர்கள் 11 ம் நூற்றாண்டின் சீர்திருத்திகள். தற்காலத்தில் திருச்சபையின் ஊழியத்துக்குத் தகுதி அற்றவர்களும் அதற்கு அவசியமான பயிற்சி செய்யாதவர்களும் சபைக்குள் புகுந்து சபையின் ஞான ஜீவனைப் பாழாக்கிவருகிறார்கள். பணம் கொடுத்து திருச்சபை உத்தியோகத்துக்கு வந்துவிடுகிறார்கள் என்று சொல்லவே மாட்டோம், ஆயினும் பூர்வ சபையில் நுழைந்த பாவம் வேறு ரூபத்தோடு தற்கால சபையில் கேடு செய்யப்பார்க்கிறது. ஒரே ஆள் 28 விதமான உத்தியோகங்களைத் திருச்சபையில் வகிக்கிறார். இப்படிப்பட்டவர் தமது பிரதான வேலையைச் சரியாய் செய்யமுடியாது. பற்பல உத்தரவாதங்களை மனச்சாட்சிக்குத் திருப்தியாகச் செய்யாமல் கொத்தும் குறையுமாய் நிறை



வேற்றி வருவார். இப்படிச்செய்பவர் வேதசாஸ்திர நிபுணனாயிருக்கலாம், சிக்கலான விஷயங்களைச் சிக்கறுக்கக்கூடிய தீக்ஷண்யம் நிறைந்தவராயுமிருக்கலாம். ஆயினும் பல காரியங்களையும் செய்யப் பிரயாசப்படுவதில் அவர் மனச்சாட்சிக்கே கேடு செய்வார். அது மட்டுமல்ல, சபைக்கு அவரால் கேடு. இதைச் சகியாத வாலிப குருமார் அநேகர் தங்கள் உத்தியோகத்தைவிட்டுத் தங்களை நீக்கிக் கொள்ளுவார்கள்.

ஆவியும் அன்பின் வல்லமையும் விளங்கினவைகளாக நமது ஊழியத்தில் கிறிஸ்துவின் சீஷராய் நடந்து கொள்வோமாக. (1 கொரி. 2, 5). உன் ஊழியத்தை முழுவதும் நிறைவேற்று. (2 தீமோ. 4, 5.) (மொழி பெயர்ப்பு) S. D. G.

---

## புதிய குருமார் வகுப்பு

நாளது ஜூலை மீ 18-ம் தேதி சென்னை கீழ்பாக்கம், குருக்குழுவில் சேர்க்கப்பட்டு வேதசாஸ்திர பயிற்சிபெறும் மாணவரின் பெயர்களும், இடங்களும் வருமாறு :—

1. S. G. புஷ்பநாதன், பாண்டூர் — மாஜி மறைத்திரு. P. ஆபிரகாம் அவர்களின் சகோதரனாகிய தஞ்சை ஸ்ரீ P. சாலமோன் என்பவரின் குமாரன்.

2. P. S. வேதநாயகம், சென்னை — பென்ஷன் பெற்ற Theophilus உபதேசியாரின் குமாரன்.

3. S.M.R. பாக்கியம், தஞ்சை-மாஜி மறைத்திரு. M. பாக்கியம், மறைத்திரு. J. D. தாவீது அவர்களின் கொள்ளுப்பேரன்.

4. J. S. விக்டர், நாகப்பட்டணம்—கௌரவ உபதேசியார் ஜேக்கப் சாமுவேல் என்பவரின் மகன்.

5. A. S. நத்தானியேல், சீர்காழி.

6. S. John Tilak, சென்னை—மாஜி மறைத்திரு S. சமாதானம் அவர்களின் குமாரன், மறைத்திரு. A. P. சாமுவேல், பென்ஷன் K. சாமுவேல் உபதேசியார் அவர்களின் பேரன்.

7. D. சாமுவேல் தேவராஜ், தரங்கை—Principal ஸ்ரீ துரைசாமி அவர்களின் குமாரன்.

8. G. தனராஜ், தரங்கை, பழைய திருச்சி மிஷன்பொக்கிஷசாலை விகிதர் மாஜி ஸ்ரீ ஞானசிகாமணியின் குமாரன்.

9. A. மார்ட்டீன் தேவதாஸ், இராபட்டி-ஸ்ரீ ஆசீர்வாதம் உபாத்தியாயரின் குமாரன், கோலாலம்பூர் மறைத்திரு A. S. முத்தையாவின் சகோதரன்.

10. J. R. மாணிக்கம், உசிலம்பட்டி.

11. சவரிமுத்து (சேவியர்) லானுகுடி.

12. தானியேல் எபனேசர், கோயமுத்தூர் — மறைத்திரு A.R. Theophilus அவர்களின் குமாரன்.

13. Edwin தேவப்பிரசாத், தென் ஆற்காடு—ஸ்ரீ L. D ஆரோன் என்பவரின் குமாரன்.

14. தானியேல் துரைசாமி, பொன்மலை—மறைத்திரு J. W. அப்பாவு அவர்களின் சகோதரி மகன்.

15. Justin சாந்தநாதன், நாகப்பட்டணம்—மறைத்திரு சா. ஞானமாணிக்கம் அவர்களின் குமாரன்.

16. S.G. சாமுவேல், திருச்சி—ஸ்ரீ S.A. Solomon அவர்களின் குமாரன். முதல் இந்திய லுத்தரன் குரு ஆரோன் அவர்களின் மரபில் தோன்றியவர்.

17. A. தங்கராஜ், சிதம்பரம்—ஸ்ரீ அனுக்கிரகம் அவர்களின் குமாரன்.

18. G. அருமைநாயகம், நரங்கை, மாஜி மணிக்கிராமம் J. K. Isaac உபாத்தியாயரின் மருமகன்.

19. Henry தேவதாஸ், சீர்காழி.

20. G. A. பாக்கியராஜா, கும்பகோணம்—மறைத்திரு G. G. ஆச்சரியம் அவர்களின் குமாரன்.

21. P. சாலமோன் தனராஜ். கமுதி, பேரையூர்—ஸ்ரீ பீற்றர் என்பாரின் மகன்.

22. Thomas, S. ராஜ்—செங்கல்பட்டு.

இம்மாணவருக்காக யாவரின் உட்கருத்தான ஜெபங்களும் கோரப்படுகின்றன.

---

புத்தக மதிப்புரை

கிறிஸ்தவ குடும்ப அளவு கோல் The Christian Home yard stick, C. L. S. Madras. Pages 28. விலை 4 அணா.) குடும்பங்கள் எவ்விதம் கிறிஸ்தவ ஜீவியத்தில் நடத்தப்படவேண்டுமோ அவ்விதமாக நடத்தப்படுகின்றனவோ அல்லவோ வென்று பரிசோதித்துக் கொள்ளத்தக்க 12 பாடங்கள் இந்நூலில் அடங்கியுள்ளன. கிறிஸ்துவினுள்ள ஒருவன் தன் ஜீவியத்தில் கிறிஸ்துவையற்றவனுகவும், பழைய ஜீவியமுள்ளவனுகவுமில்லாமல் புது ஜீவியத்தில் உட்பிரவேசிக்கிறவனுகவும், அதில் விருத்தியடைகிறவனுகவுமிருக்கிறுனென்கிற உத்தேசம் இப்பாடங்களின் மூலமாய்க் காட்டப்பட்டு, 2 கொரி 5: 17 இன்பேரில் எழுதப்பட்டிருக்கின்றன.

உபாத்திமார்களும், ஊழியர்களும், சங்கங்களை நடத்துகிறவர்களும் இவை ஒவ்வொன்றையும் தங்கள் ஜீவியத்தில் பெற்று,

மாதத்துக்கொரு பாடமாக மற்றவர்களுக்குக் கற்றுக்கொடுக்கத்தக்கதாக 12 படங்களோடு இவ்வரிய நூல் இயற்றப்பட்டிருக்கிறது.

இந்நூலை ஆயத்தம் செய்த ஆந்திர கிறிஸ்தவ கவுன்சல் கிறிஸ்தவ குடும்ப கமிட்டியாருக்கும், கண்ணைக் கவரத்தக்க விதமாய் அச்சிட்டு வெளியாக்கின C. L. S. சங்கத்தாருக்கும் நாம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்.

## மிஷனரிமாரின் போக்குவரத்து

திருப்பத்தூர் மிஷன் வைத்தியசாலையில் சேவை செய்த டாக்டர் Eriksson அம்மையாரும் பொள்ளாச்சியில் திருப்பணி செய்த மறைத்திரு. P. Knutsson அவர்களும் சுகத்தின் பொருட்டு தாய் நாடு சென்றார்கள். சீமையில் இளைப்பாறின மறைத்திரு. E. Wangsjo அவர்களும் ஸ்ரீமதி Wilhelmsson அம்மையாரும் முறையே சென்னை குருக்குழுவிலும், மதுரை Doak பெண்கள் கல்லூரியில் தங்கள் அலுவல்களில் அமர்ந்தார்கள்.

## சென்னையில் குருக்களை ஆயத்தம் செய்யும் புதிய வகுப்பு

அதில் மறைத்திரு. E Wangsjo அவர்கள் தலைவராகவும், அமெரிக்காவின் ஐக்கிய மாகாணங்களில் உயர்தர வேதசாஸ்திர பயிற்சி பெற்றுத் திரும்பி வரும் மறைத்திரு. D. R. தேவப்பிரசாத், ஜர்மனியிலிருந்து புதிதாக வந்த மறைத்திரு. W.H. Gensichen, மறைத்திரு. D. ராஜரீகம் என்போர் போதகாசிரியர்களாகவும் நியமிக்கப் பட்டிருக்கிறார்கள்.

---

கிறிஸ்து சபை வளர்ந்து பெருகுவதற்குப் பதிலாக அது நசித்துப்போக நாம் அறிந்தோ அறியாமலோ செய்வது :—

1. நாம் எவற்றைப் பெற்றுக்கொள்ளக் கூடுமோ அவற்றைப் பெறுவதற்கு மாத்திரம் தெய்வாராதனைக்குப் போவது.

2. தெய்வாராதனைக்குப் பிந்திப் போவது.

3. சீதோஷ்ண மாறுபாடுகளால் தடைப்பட்டுக் கோவிலுக்குப் போகாதிருத்தல்.

4. பாடாதிருத்தல், அல்லது தான் எவ்வளவு நேர்த்தியாய்ப் பாடக்கூடும் என்று காட்ட மாத்திரம் பாடுதல்.

5. சபை குருவுக்காகவாவது தெய்வாராதனைக்காகவாவது ஜெபிக்காதிருத்தல்.

6. கோவிலின் முன் வரிசைகளில் தாராளமாய் இடமிருந்தும் அதிக பின்னுக்கு உட்கார்ந்து குருவுக்கு உற்சாக மூட்டாதிருத்தல்.

7. கர்த்தருக்குக் காணிக்கை படைப்பது தவிர்க்கமுடியாத தீமையென்றெண்ணி, காணிக்கை கொடுப்பதில் பிசினித்தனம்பண்ணுதல்.

---

மாதத்துக்கொரு பாடமாக மற்றவர்களுக்குக் கற்றுக்கொடுக்கத்தக்க 12 படங்களோடு இவ்வரிய நூல் இயற்றப்பட்டிருக்கிறது.

இந்நூலை ஆயத்தம் செய்த ஆந்திர கிறிஸ்தவ கவுன்சல் கிறிஸ்தவ குடும்ப கமிட்டியாருக்கும், கண்ணைக் கவரத்தக்க விதமாய் அச்சிட்டு வெளியாக்கின C. L. S. சங்கத்தாருக்கும் நாம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்.

### மிஷனரிமாரின் போக்குவரத்து

திருப்பத்தூர் மிஷன் வைத்தியசாலையில் சேவை செய்த டாக்டர் Eriksson அம்மையாரும் பொள்ளாச்சியில் திருப்பணி செய்த மறைத்திரு. P. Knutsson அவர்களும் சுகத்தின் பொருட்டு தாய் நாடு சென்றார்கள். சீமையில் இளைப்பாறின மறைத்திரு. E. Wangsjo அவர்களும் ஸ்ரீமதி Wilhelmsson அம்மையாரும் முறையே சென்னை குருக்குழுவிலும், மதுரை Doak பெண்கள் கல்லூரியில் தங்கள் அலுவல்களில் அமர்ந்தார்கள்.

### சென்னையில் குருக்களை ஆயத்தம் செய்யும் புதிய வகுப்பு

அதில் மறைத்திரு. E Wangsjo அவர்கள் தலைவராகவும், அமெரிக்காவின் ஐக்கிய மாகாணங்களில் உயர்தர வேதசாஸ்திர பயிற்சி பெற்றுத் திரும்பி வரும் மறைத்திரு. D. R. தேவப்பிரசாத், ஜர்மனியிலிருந்து புதிதாக வந்த மறைத்திரு. W.H. Gensichen, மறைத்திரு. D. ராஜரீகம் என்போர் போதனாசிரியர்களாகவும் நியமிக்கப் பட்டிருக்கிறார்கள்.

---

கிறிஸ்து சபை வளர்ந்து பெருகுவதற்குப் பதிலாக அது நசித்துப்போக நாம் அறிந்தோ அறியாமலோ செய்வது :—

1. நாம் எவற்றைப் பெற்றுக்கொள்ளக் கூடுமோ அவற்றைப் பெறுவதற்கு மாத்திரம் தெய்வாராதனைக்குப் போவது.

2. தெய்வாராதனைக்குப் பிந்திப் போவது.

3. சிநேகிதோஷ்ண மாறுபாடுகளால் தடைப்பட்டுக் கோவிலுக்குப் போகாதிருத்தல்.

4. பாடாதிருத்தல், அல்லது தான் எவ்வளவு நேர்த்தியாய்ப் பாடக்கூடும் என்று காட்ட மாத்திரம் பாடுதல்.

5. சபை குருவுக்காகவாவது தெய்வாராதனைக்காகவாவது ஜெபிக்காதிருத்தல்.

6. கோவிலின் முன் வரிசைகளில் தாராளமாய் இடமிருந்தும், அதிக பின்னுக்கு உட்கார்ந்து குருவுக்கு உற்சாக மூட்டாதிருத்தல்.

7. கர்த்தருக்குக் காணிக்கை படைப்பது தவிர்க்கமுடியாத தீமையென்றெண்ணி, காணிக்கை கொடுப்பதில் பிசினித்தனம்பண்ணுதல்.

8. ஓர் அன்னியர் நமது ஆராதனைக்கு வரும்போது அவரை வரவேற்று, இடங்கொடுத்து, ஆராதனையில் உற்சாகமாக பங்கெடுக்கும்படி உதவி செய்யாதிருத்தல். நாம் அவரது சகோதரரே என்று அவர் எண்ணும்படி நடவாதிருத்தல்.

9. ஞாயிறு நமது வீட்டிலிருக்கும் விருந்தாளிகளை நம்முடன் கோவிலுக்கு அழைத்து வராதிருத்தல்.

10. நாம் ஆராதனைக்குப் போகும்போது ஆராதனையை அசட்டை செய்யும் வழியிலுள்ள நமது உடன் கிறிஸ்தவரை நம்முடன் ஆராதனைக்கு வரத்தூண்டி உற்சாகமூட்டாதிருத்தல்.

(Translated from the world Christian Digest May 1952) R.D.S.

---

## HELP TO GERMAN MISSIONARIES

| | | | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|
| As per previous statement in June 1952 issue ... | | | 8,116 | 2 | 3 |
| May | from Mr. | R. S. Muthusamy, Kuala Lumpur | 15 | 0 | 0 |
| June 6 ,, | ,, | R. S. Muthusamy, Kuala Lumpur | 15 | 0 | 0 |
| ,, 19 ,, | ,, | C. Johnson Mangalaraj, Jubbulpore | 5 | 0 | 0 |
| July 10 | ,, | R. S. Muthusamy, Kuala Lumpur | 15 | 0 | 0 |
| ,, 18 | | Tr. Israel, Chinniapuram ... | 2 | 0 | 0 |
| ,, 18 | | Mr. G. S. David, Salem ... | 3 | 0 | 0 |
| ,, 18 | | Rev. S. M. Appadurai, Tiruppur ... | 3 | 0 | 0 |
| | | | 8,174 | 2 | 3 |
| Already sent up | | ... | 7,563 | 10 | 3 |
| | | Balance Rs. | 610 | 8 | 0 |

"Tranquebar House,"
Tiruchirapalli,
18th July 1952.

J. SANDEGREN,
*Bishop, TE.L.C.*

---

வேண்டுதல் : அருணோதயத்துக்குப் புதிய சந்தாதார்களைச் சேர்ப்பதில் முயற்சி யெடுக்க அன்பர்களை பரிவுடன் கேட்டுக் கொள்ளுகிறோம். பத்திராதிபர்.

Printed & Published by
A. Gnanapragasam at The Tranquebar Printing & Publishing House.
9, Abirami St., Vepery, Madras 7.
Edited by Rev. S. Gnanamanickam, Nagapattinam.

